வச்சணந்தி மாலையென்னும்

# வெண்பாப்பாட்டியல்

## மூலமும்-உரையும்.

---

## வரையறுத்த பாட்டியல்

மூலமும்-உரையும்.

---

இவை

இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை

விசாகப்பெருமாளையரவர்கள்

முன்னிலையில்

தில்லையம்பூர்ச்

சந்திரசேகரகவிராஜபண்டிதரவர்களால்

பதிப்பிக்கப்பட்ட பிரதிக்கிணங்க,

திரிசிரபுரம்

தி. சபாபதிபிள்ளை

அவர்களாற்றமது

சென்னை:

ஸ்ரீமட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1896௵

சிவமயம்.

## வச்சணந்திமாலையென்னும்

# வெண்பாப்பாட்டியல்

மூலமும் - உரையும்.

முதலாவது

## முதன்மொழியியல்.

### பாயிரம்.

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலர்த்தாள்
துதிகொண்டு நாளுந் தொழுது—நுதிகொண்ட
பல்கதிர்வேலுண்கண்ணாய் பாட்டியலைக்கட்டுரைப்பன்
தொல்லுலகின் மீதே தொகுத்து.

(என்பது சூத்திரம்.) யாதானுமொரு நூலுரைக்குமிடத்துப் பாயிரமுரைத் துரைக்கவென்பது மரபு. பாயிரமென்பது முகவுரை. அப்பாயிரம், பொதுவுஞ் சிறப்புமென விருவகைப்படும். அவற்றுட் பொதுப்பாயிரம் நான்குவகைப்படும்."ஈவோன் றன்மை யீத லியற்கை,கொள்வோன் றன்மை கோடன் மரபென, வீரிரண் டென்ப-பொதுவின் றொகையே." என்றாராகலின். இவற்றுள், ஈவோன்றன்மை-ஆசிரியனிலக்கணம்; ஈதலியற்கை-அவன் வித்தைகொடுக்குமுறைமை;கொள்வோன்றன்மை-மாணாக்கனிலக்கணம்;கோடன்மரபு-அவன் வித்தைகொள்ளுமுறைமை. ஆசிரியரிருதிறத்தர்-கற்கப்படுவோரும், கற்கப்படாதோருமென. அவருட் கற்கப்படுமாசிரியர்நான்குதிறத்தர். "மலைநிலம் பூவே துலாக்கோ

லென்றின்ன குலவிலுணர்வுடையோர்,, கற்கப்படாவாசிரியர் நான்கு திறத்தர். " கழற்பெய் குடமே மடற்பனைமுடத்தெங்கு, குண்டிகைப் பருத்தியோ டிவையனை யாரே. " மாணாக்கருமிருதிறத்தர், கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படாதோருமென. " அவருள்கற்பிக்கப்படு மாணாக்கரறுவகையர். "தன்மக னாசான் மகனே மன்மகன், பொருணனி கொடுப்போன் வழிபடுவோனே,யுரைகோ ளாளரோ டிவரெனமொழிப. "இவர்குணம்."அன்னங் கிளியே நன்னிற நெய்யரி,யானையானே றென்றிவை போலக், கூறிக்கொள்வர் குணமாண்டோரே. "கற்பிக்கப்படா மாணாக்கரெண்வகையர். "மடிமானி பொச்சாப்பன் காமுகன் கள்வ, னடுநோய் பிணியாளனழுக் கினத்தன், றடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டெண்மர்,நெடுநூலைக் கற்க லாகார். "ஆசிரியனியுமுறைமை. " ஈதலியல்பே யியல்புறக் கிளப்பின்,பொழிப்பே யகல மெச்சநுட்பமெனப், பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்,புகழ்ந்த மதியிற் றிகழ்ந்த நாளிற், றெளிந்த வழிவினாற் றெய்வம் வாழ்த்திக்,கொள்வோ னுணரும் வகை யறிந் தவன் வயிற், கொள்வரக் கொடுத்தல் மரபென மொழிப. "கொள்வோன் முறைமை."கொள்வோன் றன்மை கூறுங்காலைப்,பொழுதொடு சென்று வழிபடன் முனியான், முன்னும்பின்னு மிரவினும் பகலினு, மகலானாகி யன்பொடு புணர்ந்தாங்,காசற வுணர்ந்தோன் வாவென வந்தாய், இருவென விருந்து சொல்லெனச் சொல்லி,நெஞ்சு களனாகச் செவிவாயாகக், கேட்டவை கேட்டவை வல்லவனாகிக்,கொடுத்தன கோடலவனது பண்பே " இவை யெல்லா நான்முகத்து முரைக்கப்படுதலிற் பொதுப்பாயிரமாம். இனிச் சிறப்புப்பாயிரம் எண்வகைப்படும். "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே,கேட்போர் பயனோ டாயெண்பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே " என்றுராகலின். அன்றியும், இவ்வெட்டுடன், காலம், களன், காரணமென்னும் மூன்றையுங் கூட்டிப் பதினொன் றென்பாருமுளர் " காலங் களனே காரணமென்றிம் மூவகை யேற்றி மொ

ழிருமுளரோ. ,, என்றாராகலின். அவற்றுள், ஆக்கியோன் பெயரென்பது நூல்செய்த ஆசிரியன் பெயர். இந்நூல் யாராற் செய்யப்பட்டதோ வெனின் "கற்றவர் புகழுங் களந்தையென் பெரும்பதிக்,குற்றமில் வாய்மைக் குணவீரபண்டிதன்"என்னும் ஆசிரியனாற் செய்யப்பட்டது. வழியேயென்பது இன்னநின் வழித்தென்றல். இஃது, எந்நூல் வழித்தோ வெனின், இந்திரகாளி யென்னும் பாட்டியன் மரபின் வழித்து. எல்லையெனபது நடக்குமெல்லை. இஃது, எவ்வெல்லையி னடக்குமோ வெனின், தமிழ் வழங்கு மிடமெங்குமென்க. நூற்பெயரென்பது நூலினது பெயரிது வென்றல். இந்நூல் என்னபெயர்த்தோ வெனின் " எய்திய மணிப்பூ ணிலங்குமணி நெடுந்தேர், வேந்தர் சூடும் விரைகெழு மலர்த்தாள், விளங்கெழின் மாடத்துக் களந்தையெம் பெருமான், வளர்ந்த கீர்த்தி வச்சணந்தி தேவ, னென்னுமாமுனிசெய்தவிதனுல்,, வச்சணந்திமாலை யென்னும் பெயர்த்து.யாப்பென்பது,தொகுத்தும் விரித்தும்,தொகைவிரிப்பவுத்தும், மொழிபெயர்த்து மாக்கல். அவற்றுள், இஃதெவ்வாறுக்கப்பட்டதோவெனின் தொகுத்தாக்கப்பட்டது. நுதலியபொருளென்பது, எடுத்துக்கொண்ட பொருளின்னதென்றல். இஃது, எடுத்துக்கொண்டபொருள் யாதோ வெனின், பாட்டியன் மரபு. கேட்போரென்பது நூலாய்வார். இப்பாட்டியலாய்ந்தோர் யாரோவெனின், சிங்கா வண்புகழ் செறிபொழிற் திருமலைப், பங்கய மலர்த்தாட் பண்டித னென்னுமுனிவராய்ந்தாரென்றுணர்க. பயனென்பதுஇன்னபயக்குமென்றல். இந்நூல் ஓத என்னபயக்குமோ வெனின், அறம், பொருள், இன்பம், வீடென்னுநான்கினையும் பயக்கும். காலமென்பது இன்னார்காலத்திந்நூல்செய்ததென்றல். இந்நூல்யார்காலத்துச்செய்ததோவெனின்"குருத்தவா மணிமுடிக் கொற்றவர்கோமான், திருந்தகு மணிமுடித் திரிபுவனதேவன்என்னும் அரசன் காலத்திற் செய்ததென்றுணர்க. களனென்பது நூல்கேட்பித்த தின்னாரவைக் களத்தென்றல் இந்நூல்கேட்பித்த தியாரவைக் களத்தெனில், கடவுண்முத

வியாற்சங்கத்தா ரவைக்களத்தென்றுணர்க. காரணமென்பது நூல்செய்தற்குக் காரணமின்னதென்றல். இந்நூல்யாது காரணமாகச் செய்யப்பட்டதோவெனின், பரந்தபாட்டியன் மரபுகளிற் கரந்துகிடந்த பொருளையெல்லாம் ஒருகோவைப்படுத்தல் காரணமென்றுணர்க. சிறப்புப்பாயிரமென்பது நாலுணர்த்திய வெழுந்த அந்நூற்கு, இன்றியமையாதது. இந்நூற்குச் சிறப்புப்பாயிரம் யாதோவெனின். "பண்பார் கவிஞர் வியந்தேத்தப் பாட்டியலாம், வெண்பா வந்தாதி விளம்பினான்-கன்பாருக், கோடாத சீர்த்திக் குணவீர பண்டிதனும், பிடார் களந்தைப் பிரான்.,, என்றுணர்க. இந்நூலுள், இவ் வாதியியல் என்ன பெயர்த்தோவெனின், முதன்மொழியிலக்கண முணர்த்தினமையின், முதன்மொழியியலென்னும்பெயர்த்து. அற்றேல், எடுத்தசூத்திரந் தொடுத்தபொருள் யாதோவெனின், தெய்வவணக்கமும், அதிகாரமுமுணர்த்ததனுதலிற்று. (இ-ள்.) மதிகொண்ட -தொழுது எனத் தெய்வவணக்கங் கூறப்பட்டது. பாட்டியலைக் கட்டுரைப்பன்-தொகுத்து. எனஅதிகாரங்கூறப்பட்டது. நதிகொண்டபல்கதிர்வேலுங்கண்ணுய்என்பது, மகடூஉமுன்னிலை. இந்நூலுள் சில செய்யுளில் மகடூஉமுன்னிலைவரும். (க)

பாயிர முற்றிற்று.



தொகுத்துரைத்த மங்கலஞ் சொல்லெழுத்துத் தானம்
வகுத்தபா லுண்டி வருணம்-பகுத்தநாள்
தப்பாக் கதிகணமென் றீரைந்தின் றன்மையினைச்
செப்புவதா முன் மொழியின்சீர்.

(என்னெனின்,) உரியவோத்தினுள் ஒன்றும்பொருள் இவையெனப்பெயரும், முறையும், தொகையுமுணர்த்து-ற்று

(இ-ள்.) மங்கல முதலாகக் கணமீறாகக் கிடந்த பத்தினையுஞ்சொல்வது முதன்மொழியின் றன்மை— (எ-று.) இப்பத்தினையுந் தத்தமிலக்கண முரைக்குஞ் சூத்திரத்துள்ளே காட்டுதும். (உ)

மங்கலப்பொருத்தம்.

சீரெழுத்துப் பொன்பூ திருமணிநீர் திங்கள்சொற்
கார்பரிதி யானை கடலுலகம்-தேர்மலைமா
கங்கை நிலம்பிறவுங் காண்டகையமுன்மொழிக்கு
மங்கலமாஞ் சொல்லின் வகை.

(எ-ன்,) நிறுத்தமுறையே முற்கூறியபத்தனுள் அடுத்த மங்கலமாராய்கின்றது. (இ-ள்.) சீர் முதலாக நிலமீறாக வென்னப்பட்ட பத்தொன்பதும் பிறவும் முதன்மொழியிடத்தே நிற்றற்குரிய மங்கலச்சொல்லினது கூறுபாடாம்—(எ-று.) பரியாயநாமம் வரினு மிழுக்காது. (ங)

சொற்பொருத்தம்.

வகையுளி சேர்தல் வனப்பின்றாய் நிற்றல்
தொகையார் பொருள்பலவாத் தோன்றல்-தகையில்
பொருளின்மை யீறு திரிதலே போல்வ
தருமுதற்சீர்ச் சொற்காகுந் தப்பு.

(எ-ன்,) முன்மொழிக்காகாதசொல் இன்னதென் றியம்புகின்றது. (இ-ள்.) முதலெடுத்துக்கொண்ட மூவசைச்சீரியவாகிய சொற்கண் மங்கலத்தவாயினும் வகையுளிசேர்ந்தனவும், சிறப்பில்சொல்லும், பலபொருட் கேற்றசொல்லும், பொருளில்சொல்லும், தோன்றல், திரிதல், கெடுதலென்னும்விகாரவிறுதிச்சொல்லும், முன்வைக்கப்படா—(எ-று.) எனவே, அல்லனயாவையுஞ் சொல்லற்பாலனவென்றுணர்க.

எழுத்துப்பொருத்தம்.

தப்பாதமூன்றைந்தே ழொன்பான்றவறில்வெண்
ணொப்பாமுதற்சீர்க் குணாசெய்வர்-செப்புங்கால்

தண்டாத நான்காறெட் டாகா தவிர்கென்று
கொண்டா னெழுத்தின் குறி.

(எ-ன்,) முன்மொழி எழுத்திலக்கணமுணர்-ற்று. (இ-ள்.) ஒற்றுப்பட மூன்றும், ஐந்தும், ஏழும், ஒன்பதுமாகிய வெழுத்தான் முதன்மொழிக்கு வருவதுநன்று. நான்கும், ஆறும் எட்டுமாகியவெழுத்தான்முதன்மொழிக்குவருவதுதீது-எ-று இரண்டெழுத்தா ராயாது விட்ட தெற்றுக்கெனின் " முன் மொழியாகலான் மூவகைச்சீ ரல்லன, நன்மைசா றெய்வ ந விலாமை.,, என்னுமிதனுன்மறுக்கப்பட்டது. ஒற்றுப்படவெ ன்ப தெற்றுற் போந்ததெனின், ஒற்றெழுத் தொன்பதெழு த்தான் வருவதொரு மூவகைச்சீரின்மையினென்க. ஒற்றைப் படவருவன வியனில்ல,இரட்டைப்படவருவன சமனில்ல. (ரு)

தானப்பொருத்தம்.

குறிலைந்துந் தந்நெடில்கொண் டிஉஐ ஔசேர்ந்
தரிபால னாதியா வைந்தும்-இறைவன்பேர் (ணம்
மூன்னெழுத்துப் பாலனில்வைத்தெண்ணிமூப்பே மர
என்னுமிவை தீதென்றே யெண்.

(எ-ன்,) ஐவகைத்தானமு மெய்வகையாக விரிக்கின்றது (இ-ள்.) குற்றெழுத்தைந்தோடுந் தமக்கொத்த நெடிலைச்சே ர்த்து, இ உ க்கள் நின்றதானத்து முறையே ஐகார ஔகாரங் களைச்சேர்த்தால், உயிரும், உயிர்மெய்யுமென்று சொல்லப்ப ட்ட தொகையெல்லாம் ஐந்துகூறுயடங்கும். இவற்றைப் பா ட்டுடைத்தலைமகன் இயற்பெயரின் முதலெழுத்தின் கூற்றை த்தொடங்கிப் பாலன், குமரன், இராசன், மூப்பு, மரணமெ னவருவித்தால், அவற்றுள், மூப்பும், மரணமுமாகா. அல்ல னமுதற் சீரின்முதலெழுத்தாய் வருவன நன்கு—எ-று. (சு)

(பாற்பொருத்தம்)

என்னுங் குறிலாணி யைந்தநெடிலெல்லாம்
பெண்ணாகு மொற்றுய்தம் பேடாகும்-பெண்ணினோ

டாண்புணர்ச்சிக் கவ்வவ் வெழுத்தே மயங்கினுமாம்
மாண்பில்லே பெடென்றார் மதித்து.

(எ-ன்.) பாலிலக்கணமுணர்த்துகின்றது. (இ-ள்.) குற்றெ ழுத்தெல்லாம்ஆண்பாலெழுத்தாம். நெட்டெழுத்தெல்லாம் பெண்பாலெழுத்தாம். ஒற்றெழுத்தும், ஆய்தவெழுத்தும்அ லியெழுத்தாம். ஆண்பாலைப்புகழுமிடத்து ஆணெழுத்துச்சி றப்புடைத்து. பெண்பாலைப் புகழுமிடத்துப் பெண்ணெழுத் துச் சிறப்புடைத்து. மயங்கிவந்தவெனினும் வரையப்படா. அலியெழுத்து முன்னிற்குந் தகைமையவல்ல—(எ-று.) முத ன்மொழி யென்பததிகாரத்தாற்கொள்க. (எ)

உணுப்பொருத்தம்.

மதித்த கசதநப மவ்வோடு வவ்வும்
உதித்தமைந்த நாற்குற் றுயிரும்-துதித்தமுதென்
றுதி மொழிக்குந் தசாங்கத் தயலுக்கும்
ஈதிலவே யென்றார் தெரிந்து.

(எ-ன்,) உண்டி யிரண்டுமுணர்த்திய வெழுத்தா லவற்றுட் கொண்டவமுதெழுத்துக் கூறுகின்றது. (இ-ள்.) க ச த ந ப ம வவ்வென்னும் ஒற்றுக்களேழும், அ-இ-உ-எ-என்னும்நான் கு குற்றுயிரும், அமுதவெழுத்தாம். அவை மொழிமுதலும், தசாங்கத்தயலும், வந்துவழங்கு மரபினவாம்—(எ-று.)(அ)

தெரிந்த யரலமேற் சேர்ந்தவா வோவும்
புரிந்தவற் றொற்றாய்தப் புள்ளி-விரிந்த
அளவொடுகான் மாத்திரையு மாமென் றறிந்தோர்
உளவென்றார் நஞ்செனுற் றெழி.

(எ-ன்,) எஞ்சிநின்ற நஞ்செழுத்து நவில்கின்றது.(இ-ள்.) கூறிய ய ர லக்கள் மேலேறியஆகார ஓகாரமும்,யரலவென் னுமொற்றும், ஆய்தப்புள்ளியும்,ஒற்றுவுயிரொன்னும் அளபெ டையிரண்டும், மகரக்குறுக்கமும், ஆய்தக்குறுக்கமும், ஆகி

யபதினுன்கும் நச்செழுத்தாம். அவை ஆதிமொழிக்குத் தசாங்கத் தயலுக்கு மாகா—(எ-று.) முதற்சீராகிய மங்கலச்சொல்லின்கண் நஞ்செழுத்து வந்தனவாலோவெனின், " ஈஞ்சுமமுதமா., மங்கலம் புகினே, என்பவாகலின், மூவசைச்சீருள் மங்கலச்சொல்லொழியக்கொள்க. நஞ்சினுமமுதினு நாட்டப்படாவாகியெஞ்சிநின்ற உயிரும் உயிர்மெய்யும்,மெய்யும் எப்பாற்பட்டவெனின்,"அமுதெழுத் தென்ற வாதியுயிர் நான்கோடும், புணர்ந்த மெய்யை யுணர்ந்தமு தென்ப. "மெய்யா மமுதின் மேவியவுயிரும் பொய்தீர் புலவர் பொருத்தினவென்ப.," "நஞ்சா மொற்றொடு கடந்த வுயிர்களும் வஞ்சமில்புலவர் மறுத்தில ரென்ப' 'இருவகை யுண்டியென் றெடுத்தன வல்ல, தாமே நிற்பினுந் தோமில வென்ப.,, என்பன இந்திரகாளி. (கூ)

வருணப்பொருத்தம்.

ஒழியா வுயிரனைத்து மொற்றுமுத லாறும்
அழியா மறையோர்க்கா மென்பர்-மொழியும்
அடைவேயோ ராறு மரசர்க்கா மென்பர்
படையாத சாதிகளின் பண்பு.

(எ-ன்.) வருணநான்கனுள் மறையோர்சாதியும், அரசர்சாதியு மறைகின்றது. (இ-ள்.) உயிர்பன்னிரண்டும் ஒற்றுமுதலாறும், பயிலுந்தன்மைப் பார்ப்பனச்சாதி. அல்லாமெய்யி னடையவேயாறு,மல்லார்புயத்து மன்னர்சாதி—(எ-று.)

பண்பார் வணிகர்க்காம் பாங்கிலவ றனக்கள்
மண்பாவுஞ் சூத்திரர்க்கா மற்றையவை-நண்பால்
அரனரிசேய் மால்கதிர்கூற் றும்மழைபொன்மெய்க்குப்
பிரமன் படைப்புயிர்க்குப் பேசு.

(எ-ன்,) அல்லாவருண மிரண்டுமுணர்த்திச் சொல்லாப்படைப்புஞ் சொல்லுகின்றது. (இ-ள்.) ல வ ற ன என்னுநான்குமெய்யும் வணிகர்வருணமாம். ழ ள வென்னு மிரண்டுஞ்சூத்திரவருணமாம். அரன்,அரி,செவ்வாய்,புதன்,இரவி,ம

தி, இயமன், வருணன், வியாழம், என்னுமொன்பது புத்தேளி ரும், முறையே இரண்டிரண்டாகப் பதினெட்டுமெய்யும்ப டைத்தார். பன்னீருயிரும்பிரமன்படைத்தான்—(எ-று.) இச் சூத்திரத்துட் கதிரெனப்பொதுப்படக் கூறியது, கதிரண்டு ங்கோடற்கு. படைப்பை அதிகாரத்தாற் றழீஇக்கொள்ளாதெ டுத்தோதித் தொடுத்தமை படைப்புவேண்டாமை முதனூற முவிற்றுதலானும், பிறர்தான்முடிந்தது தானுடன் படுதலா னுமென்க. அன்றியும் இவ்வெழுத்துகட்குத் தெய்வம், அவ் வவர்களெனக் கொள்ளப்பட்டதெனினு மமையும். (கக)

நாட்பொருத்தம்.

பேசு முயிரடைவே நான்காரல் பின்னைந்து
மாசிலாப் பூராட மற்றெருமூன்-றூசிலாப்
பேருத்தி ராடமா மென்று பெரிதுணர்ந்தோர்
பாரித்தார் நாளின் பரிசு.

(எ-ன்,) ஏழியமுதலெழுத்திற்கு நாளிசைப்புழி யாதிருயி ர்க்கு, நாளறிவிக்கின்றது. (இ-ள்.) அ ஆ இ ஈ என்னு நான் குயிருங் கார்த்திகை. உ ஊ எ ஏ ஐ என்னுமைந்தும் பூராட ம், ஒ ஓ ஔ வென்னுமூன்றும் உத்திராடமாம்—(எ-று) ()

பரிசுடைய கவ்வரியி னொன்றிரண்டு மூன்றுந்
தெரிவுடைய மூன்றடைவே செப்பிற்-பிரிவுடைய
வோணமே யாதிரையே யொண்புனர்பூ சம்பூசம்
பேணி யுரைத்தார் பிறித்து.

(எ-ன்,) கவ்வருக்க நாளுரைக்கின்றது. (இ-ள்.) க கா கி கீ என்னும்நான்குந்திருவோணம். கு கூ என்னு மிரண்டுந்திரு வாதிரை. கெ கே கை என்னுமூன்றும் புனர்பூசம். கொ கோ கௌ என்னுமூன்றும் பூசமாம்.—(எ-று.) (கஉ)

பிறிந்த சகரத்து நான்கைந்து பின்மூன்
றறிந்த கலமுதன்மூன் றாகும்-செறிந்த

ஞகரத் தொருமூன்று நன்குணர்ந்தோ ராய்ந்த
பூரா்தி ரவிட்டமாம் போற்று.

(எ-ன்,) சகர ஞகர வருக்கங்களுக்கு நாளுணர்த்துகின்றது.(இ-ள்.) ச சா சி சீ என்னுநான்கும்இரேவதி. சு சூ செ சே சை என்னுமைந்தும் அச்சுவினி. சொ சோ சௌ என்னுமூன்றும் பரணி. ஞ ஞா ஞெ என்னு மூன்றும் அவிட்டமாம்.—(எ-று.) (௪௪)

போற்றுந்தகரமிரண் டேழ்மூன்றும்பொய்தீர்ந்தோர்
சாற்றுவர் சோதி முறைஞ்சதயம்-வேற்றனுடம்
கேட்டை பூரட்டாதி கேணகரத் தோராறும்
வாட்டமிலா மும்மூன்றும் வந்து.

(எ-ன்,) தகர நகர வருக்கங்களுக்கு நாளுணர்க்கின்றது. (இ-ள்.) த தா என்னு மிரண்டும் சோதி. தி தீ து தூ தெ தே தை என்னு மேழும் விசாகம். தொ தோ தௌ என்னு மூன்றுஞ் சதயம். ந நா நி நீ நு நூ என்னுமாறும் அனுடம், நெ நே நை என்னு மூன்றுங் கேட்டை. நொ நோ நௌ என்னு மூன்றும்பூரட்டாதியாம்--(எ-று.) (௪௫)

வந்த பகரத்து நான்கிரண்டா றுக்திரந்தொட்
டந்தமிலா மூன்றுகு மவ்வடைவே-வந்தசுற்பின்
ஆறுமக மூன்றுடன்மூன் றுமிலியம் பூரமா
மாதின் யகரத்தின் மாட்டு.

(எ-ன்,) பகரவருக்கத்திற்கும்,மகரவருக்கத்திற்கும்,நாளுணர்க்கின்றது. (இ-ள்.) ப பா பி பீ என்னு நான்கும் உத்திரம். பு பூ என்னு மிரண்டும் அத்தம் பெ பே பை பொ போ பௌ என்னுமாறுஞ் சித்திரை. ம மா மி மீ மு மூ என்னுமாறும் மகம். மெ மே மை என்னு மூன்றும் ஆயிலியம். மொ மோ மௌ,வென்னு மூன்றும்பூரமாம்.—(எ-று.) (௪௬)

மாட்டும் யகரத்துள் யாவுத் திரட்டாதி
சுட்டியயூ காரயோ காரங்கள்-காட்டிய

மூலம் வகரந் தொடுநான்கு ரோகணிமான்
தோலாத நான்கெனவே சொல்.

(எ-ன்,) யகர வகர வருக்கங்களுக்கு நாளுணர்த்தின்றது. (இ-ள்.) யா ஒன்றும் உத்திரட்டாதி. யூ யோ என்றுமிரண்டும் மூலம். வ வா வி வீ என்று நான்கும் உரோகணி. வெ வே வை வௌ என்று நான்கு மிருகசிரமாம்.—(எ.று.) ()

சொல்லியநாண் மூவொன்ப தாகத் துணிந்தொன்று
புல்லியமூன் றைந்தேழ் பொருந்தாவாம்-அல்லனவற்
றட்ட மராசி வயினு சியமிவையும்
விட்டொழித்த னன்றெனவே வேண்டு.

(எ-ன்;) பாட்டுடைத்தலைவன்பெயர் முதலெழுத்தினுட்கும்,மங்கலமொழி முதலெழுத்தினுட்கும் பொருந்துமாறுணர்த்துகின்றது. (இ-ள்.) சொல்லியநாளிருபத்தேழையும், ஒன்பதொன்பதாகமூன்றுகூறுக்கிப் பாட்டுடைத்தலைமகனியற்பெயரின் முதலெழுத்தினுளைத் தொடக்கிக் கூறுகளையென்னை ஒன்று மூன்று ஐந்து எழ்வரிற் பொருந்தா. அல்லாத நாட்களுட் பாட்டுத்தலைவன்பெயர் முதலெழுத்தி னிராசி தொடங்கி எட்டாமிராசி நாட்களும் பொருந்தா. வயினுசியமாகிய என்பத்தெட்டாங்கால் நின்றநாளும் பொருந்தா-(எ-று.)புல்லியவென்று மிகுத்துச்சொல்லியவதனுல், மூன்றுமொன்பதின் மூன்றுமைந்து மேழும் பொருந்துமெனக் கொள்க. மூன்று மொன்பதின் மூன்றைந் தேழும், பொருந்துமென்று புகலுவர் புலவர். "—என்பது இந்திரகாளி. ()

கதிப்பொருத்தம்.

வேண்டுங் குறில்வன்மை யீரெழுத்தால் விண்ணோர்க்
ஆண்டநெடின் மூதனுன் கந்தமொழித்-திண்டிய (காம்
மென்மையா மக்கட் கிடையிரண்டு மெய்க்கதிக்கு
நன்மையா மூன்மொழிக்கு நாட்டு.

(எ-ன்) ஒதியவாற்கதி யுணர்த்திய வெழுத்தவற்றுதியிரன் டெறிவிக்கின்றது. (இ-ள்.) அ இ உ எ யென்னு நான்கு குற்றுயிரும் க ச ட த ப வென்னுமைத்தொற்றுந்தெய்வகதியாம். ஆ ஈ ஊ ஏ யென்னு நான்குநெட்டுயிரும், ஞ ஞ ண ந ம வென்னுமைந்தொற்றும், மக்கட்கதியாம். இவ்விரண்டு கதியெழுத்து முன்மொழிக்கு நன்மையுடையவாம். எ-று— (கக)

நாட்டிய ஒஔ யரலழநல் வன்மைக்
கிட்டிய வந்தமிவை விலங்காம்-காட்டா
தொழித்த நரகர்க்கென் றேறுதிணு ரின்ன
எழுத்தாகா வாதி யிடை.

(எ-ன்) ஒழித்த கதியிரண்டு முணர்த்துகின்றது. (இ-ள்) ஒ ஔ யென்னும் உயிரிரண்டும், ய ர ல ழ வென்னுமிடையொற்றுநான்கும், வன்மையிறுதியென்றசொல்லறகாரமும் விலங்குகதியாம், காட்டாதொழிந்த ஐ ஔ வென்னுமுயிரிரண்டும், வகர ளகர னகர மென்னு மூன்றொற்றும் நரகர்கதியாம் இக்கதியிரண்டும் முதன் மொழியிடத்து வரப்பெறு வெனக்கொள்க. (உ0)

கணப்பொருத்தம்.

ஆதியிடை யிறுதி முற்றுநேரா நிரையென்
றோதுவர்நீ திமாக மொண்சுவர்க்கம்-தீதிலோர்
சொற்றுர் மதிபரிதி காவிலமா நீர்மதியு
முற்றுகி யாமுன் மொழிக்கு.

(எ-ன்) எண்வகைக்கணமுமுணர்த்து-ற்று (இ-ள்.) ஆதிநேர், இடைநேர், இறுதிநேர். முற்றுநேர், ஆதிநிரை, இடைநிரை, இறுதிநிரை, முற்றுநிரை என்றுகூறப்பட்ட, கூவிளங்கனி, புளிமாங்கனி, கருவிளங்காய், தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய்' தேமாங்கனி, கருவிளங்கனி யென்னுமெட்டும் முறையானே, நீர், தீ, வானம், துறக்கம், மதி, பரிதி

காற்று, நிலம் என்னும் பெயரினை யுடைத்தாம். இவற்றுள் நீரும், திங்களும், துறக்கமும், நிலமும் முதன்மொழிக்காகும். ஒழிந்தனவாகா. துறக்கத்தை இயமானனென்பாருமுளர். (உக)

முன்மொழி யாகலான் மூவகைச்சீ ரல்லன
நன்மைசா றெய்வ நவிலாமை-முன்மொழிக்
கிட்டிய தொன்மை யிலக்கணங்க ளிவ்வகையே
காட்டு மகலக் கவிக்கு.

(எ-ன்) கணந்தருசிறப்பின் காரணமுணர்த்தி மணந்தபத்திலக்கணம் வருமிட முணர்த்துகின்றது. (இ-ள்.) வெண்பா உரிச்சீரானும், வஞ்சி உரிச்சீரானும் வந்த எண் பெருங்கணங்கட்குத் தெய்வமடுத்தமையிற் காட்டுமுன்மொழியிடத்து, மூவகைச்சீர் காட்டி யேனையவற்றை விலக்கிய தொல்லோ ரிலக்கணங்கள் மங்கல முதலாக, இவ்வகையே அம்மூவகைச் சீரின்கட் காட்டாநின்றன அகலக்கவிக்கென்றவாறு. (உஉ)

வெண்பா.

திருமங்கை நின்றகலா டெவ்வுநோய் நீங்கும்
தருமங்க ணீங்கலாச் சார்வார்-இருநிலத்து
மன்னருள்ளார் தாழுந்தாள் வச்சணந்தி மாமுனிவன்
இன்னருளா னேக்கு மிடம்.

முதன்மொழியியல்-முற்றிற்று.

---

இரண்டாவது

# செய்யுளியல்.

---

கவிகமகன் வாதியே வாக்கியெனக் காசில்
புவியின்மே னால்வர் புலவர்-கவிகடாம்
ஆசு மதுரமே சித்திரம்வித் தாரமெனப்
பேசுவார் நால்வர்க்கும் பேர்.

(என்பது சூத்திரம்) இவ்விய லென்ன பெயர்த்தோ வெனின், செய்யு ளிலக்கண முணர்த்தினமையிற் செய்யுளி யலென்னும் பெயர்த்து. இச்சூத்திர முதலிய பொருள் யாதோவெனின்; பத்துவகை யிலக்கணமும் வித்தாரக் கவிக் குவேண்டினார் அவ் வித்தாரக்கவிகளையும், ஒழிந்து நின்ற கவிகளையு முணர்த்திய வேண்டிப் புலவரது பெயரும், முறையும், தொகையுங் கூறி, அவருள் முதற் புலவராகிய கவிகளு டைய பெயரு முணர்த்து-ற்று. (இ-ள்.) கவி, கமகன், வாதி, வாக்கி யெனப் புலவர் நால்வர். அவருள்-ஆசுகவி,மதுரகவி சித்திரகவி,வித்தாரகவி எனக் கவிகள் நால்வர். எ-று. (௧)

ஆசுகவி.

பேரெழுத்திற் சொல்லிற் பொருளிற் பெருங்கவியிற்
சிரலங்காரத்திற் றெரிந்தொருவன்-நேர்கொடுத்த
உள்ளுறைக் கப்போ துரைப்பதனை யாசென்றார்
எள்ளாத நூலோ ரெடுத்து.

(எ-ன்.) நிறுத்த முறையானே ஆசுகவி பேசுகின்றது. (இ-ள்.) இவ்வெழுத்தாலே பாடுக. இச்சொல்லாலே பாடுக. இப்பொருளாலே பாடுக. இவ் யாப்பாலே பாடுக. இவ்வ லங்காரத்தாலே பாடுக. என்றொருவன் சொன்ன வுள்ளுறை க்கு அவ னெதிரே பாடப்படுவது ஆசு கவியாம். எ-று. ஆசுகவிபாடும் புலவனும் ஆசுகவியாம். இவற்றி லிரண்டு மூன்றுமகப்படப் பாடுதல் சிறப்புடைத்து. (௨)

## மதுரகவி.

எடுத்த பொருளினோ டோசை யினிதாய்
அடுத்தவை செஞ்சொல்லா யணியும்-தொடுத்த
தொடையும் விளங்க வவைதுதிப்பச் சொல்லின்
இடமுடைய மாமதுர யாப்பு.

(எ-ன்.) மதுர கவியிது வென்கின்றது. (இ-ள்.) ஓசையும், பொருளு மினிதாய், முழுதுஞ் செஞ் சொல்லாய்,அலங்காரமுந் தொடையுந் தெற்றென்று கேட்டார் துதிக்கும்படிப் பாடுவது மதுரகவியாம்.(எ-று.) இக்கவி பாடுவோனும் மதுரகவியாம். சிறுபான்மையிற் றிசைச்சொல்லும், திரிசொல்லும், வடசொல்லும் மருவினு மிழுக்காது.

(வ-று.) பூமகளு நல்வாழ்வு பெற்றாள் புரைதீர்ந்த
நாமகளும் பல்கலையு நண்ணினாள்-தோமகல்சீர்
வையம் புரந்தளந்தை வச்சணந்தி மாமுனிவன்
செய்ய பதகமலஞ் சேர்ந்து. (௩)

## சித்திரகவி.

யாப்புடைய மாலைமாற் றாதியா வேனையவும்
வாய்ப்புடைய சொல்லின் வருத்தமைத்து-நீப்பிலா
வண்ணமுந் தோன்றுன் மரபு வழுவாமற்
பண்ணுவது சித்திரத்தின் பா.

(எ-ன்) சித்திரகவி யித்தன்மைத் தென்கின்றது.

(இ-ள்) மாலைமாற்று, சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, காதைகரப்பு, கரந்துறைப்பாட்டு, தூசங்கொளல், வாவனாற்றி, கூடசதுக்கம், கோமூத்திரி, ஓரெழுத்துப்பா, வல்லினப்பாட்டு, மெல்லினப்பாட்டு, இடையினப்பாட்டு, சித்திரக்கா, விசித்திரக்கா, வித்தாரக்கா, விகற்பநடை, வினவுத்தரம், சருப்பதோபத்திரம், எழுத்துவருத்தனை, நாகபந்தம், முரசபந்தம், நிரோட்டம், சித்து, ஒரு

பொருட்பாட்டு, பலபொருட்பாட்டு, மாத்திரைப்பெருக்கம், மாத்திரைச்சுருக்கம், எழுத்துப்பெருக்கம், எழுத்துச்சுருக்கம், இன்னவை பிறவுமாகிய பல விகற்பத்தாற்செய்யப்பட்டு ஓசைகெடாமல், எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக்குற்றம், என்னுங் குற்றங்கள் படாமல், பாடப்படுங் கவி சித்திரகவியாம். (எ-று.) இக்கவிபாடுவோனுஞ் சித்திரகவியாம். இவையெல்லாம் யாப்பதிகாரத்திற் கண்டுகொள்க. (ச)

வித்தாரகவி.

பாங்கார் தொடர்நிலைப்பா பல்பாதஞ் சேர்தனிப்பா
ஈங்ககலப் பாக்க ளிரண்டாகும்-ஆங்குத்
தொடர்நிலைப்பா தன்விகற்பஞ் சூழ்வளையாய்சொல்லிற்
கடையிலவே யென்றுரைத்தார் கண்டு.

(எ-ன்.) அகலக்கவி புகல்கின்றது. (இ-ள்.) பல செய்யுட்கள் கூடிவந்த தொடர்நிலைச்செய்யுளும், அடிபலவாய் நடக்குந் தனிப்பாச்செய்யுளு மென்னும் இருதிறமும் அகலக்கவியாம். அவற்றுட் டொடர்நிலைச்செய்யுளை விகற்பிக்குமிடத்து ஏற்றபொருளெடுத்துப் பாடுவோரளவல்லது இன்னவளவென் றுரைப்பதரிது. (எ-று.) அகலக்கவி பாடுவோனும் அகலக்கவியாம். (ரு)

பிள்ளைக்கவி.

கண்டுனொக்கிற் பிள்ளைக் கவிதெய்வங் காக்கவெனக்
கொண்டுனொக்குந் தேவர்கொலையகற்றி-ஒண்டொடியாய்
சுற்றத்தளவா வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்த னூலின் முறை.

(எ-ன்.) பலவிகற்பங்களிற் சிலவெடுத்துரைப்பான் வேண்டி, யவற்றுள் பிள்ளைக்கவிக்கு இலக்கண முணர்த்துகின்றது. (இ-ள்.) பிள்ளைக்கவி பாடுமிடத்து வேண்டுங்கடவுளைச்

சுட்டிப் பாட்டுடைத்தலைவனை அவன்சுற்றத்தொகையோடு தேவர் கொலையகற்றிக் காக்கவென, வகுப்பாலும், ஆசிரிய விருத்தத்தாலும் பாடுக. (எ-று.) கண்டுகொள்கின் என்று மிகுத்துச் சொல்லிய வதனால், காப்புக்கவிகளை மூன்று ஐந்து ஏழ் ஒன்பது பதினொன்றாகத் தொடுத்துக் காப்புமாலையென்று பாடுகையு முளதென்றுணர்க. (௬)

முறைதரு மூன்றாதி மூவேழீ றாந்திங்கள்
அறைகநிலம்பத்து மாண்டைந்தேழ்-இறைவளையார்க்
கந்தஞ் சிறுபறையே யாதியா மூன்றொழித்துத்
தந்தநிலை மோரேழுஞ் சாற்று.

(எ-ன்.) இதுவுமது (இ-ள்.) பிள்ளைப்பிரபந்தம் மூன்றாமாதமுதல் இருபத்தோராம் மாதம்வரை ஒற்றித்த மாதமாகிய பத்து மாதங்களினுங் கேட்பிக்கப் படும். அன்றியும், ஐந்தாமாண்டினும், ஏழாமாண்டினு மிக்கவிசேட்பிக்கினு மிழுக்காது. பெண்பிள்ளைக் கவிபாடு மிடத்துச், சிறுபறைகொட்டலும், சிற்றில் சிதைத்தலும், சிறுதேருருட்டலு மாகிய மூன்றுநிலமுமொழித்து, ஒழிந்த வேழுநிலமும் பாடப்படும். (எ-று.) இவ்வேழுடன், கழங்கு, அம்மனை, ஊசல் என்னுமூன்றையுங்கூட்டிப் பத்தாகப் பாடுவாரு முளர். (எ)

சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை-போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து.

(எ-ன்.) பிள்ளைக்கவிக்கேற்ற பத்துநிலமு முறைக்கின்றது. (இ-ள்.) காப்பும், தாலும், செங்கீரையும், சப்பாணியும், முத்தமும், வாரானையும், அம்புலியும், சிறுபறைமுழக்கலும், சிற்றில்சிதைத்தலும், சிறுதேருருட்டலும், எனமுறையானே பாடுக. (எ-று.) நிலங்கள்பத்தும், தம்மிலொக்க

க்கொல்லோடு மிடத்து ஒற்றிக்கப்படுவது சிறப்புடைத்து. இரட்டித்துப் பாடினு மோனை பெயர்த்துப் பாடுக. (அ)

பல்சந்தமாலை. அந்தாதி.

பத்தாதி நூறந்தம் பல்சந்த மாலையாம்
ஒத்தாய வெண்பா வொருநூறு-ஒத்தசீர்
அந்தாதி யாகுங் கலித்துறையு மவ்வகையே
வந்தா லதன்பே ரவை.

(எ-ன்.) பல்சந்த மாலைகளும், அந்தாதியு முணர்த்துகின்றது. (இ-ள்.) பத்துமுதலாக நூறீறாக நின்ற விகற்பத்தது பல்சந்தமாலை விகற்பமாம். நேரிசைவெண்பா நூறுஅந்தாதியாய்வந்தால் வெண்பாவந்தாதி யென்றும், கட்டளைக்கலித்துறை நூறுஅந்தாதியாய் வந்தால், கலித்துறையந்தாதி யென்றும்பெயர் பெறும். (எ-று.) பல்சந்தமாலை வகுப்பும், ஆசிரியமுமாய் அந்தாதித்துவரும். (௯)

கலம்பகம்.

வைக்கும் புயந்தவம்வண் டம்மனை பாண்மதங்கு
கைக்கிளைசித் தூசல் களிமடக்கூர்-மிக்கமறம்
காலந் தழையிரங்கல் சம்பிரதங் கார்தூது
கோலுங் கலம் பகத்தின் கூறு.

(எ-ன்.) கலம்பக விலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) புயம், தவம், வண்டு, அம்மனை, பாண், மதங்கு, கைக்கிளை, சித்து, ஊசல், களி, மடக்கு, குடி, மறம், காலம், தழைஇரங்கல், சம்பிரதம், மேகவிடுதூது என்னு மிப்பதினெட்டும் கலம்பகத்தினுறுப்புப் பொருளாம். (எ-று.) மிக்கமறமென்று சிறப்பித்த வதனால், இப்பதினெட்டும், கலம்பகத்துக்கு நிலைபெற்ற வுறுப்பு. ஒழிந்தன இன்னவகையான பொருளால் வருபவென்னு நிலைபேறுடைய வல்லவென்று கொள்க.

ஊறென்றது குடிமை. இரங்கலென்றது காமமிக்க கழிபடர் கிளவி. (சுய)

கூறு மொருபோகு வெண்பா கலித்துறைகள்
மாறின் முதலுறுப்பா மன்விருத்தம்-வேறகவல்
வஞ்சித் துறைவிருத்தம் வான்றுறைவெண் பாமருட்பா
எஞ்சாக் கலியினங்கொண் டூட்டு.

(எ-ன்.) கலம்பகப்பா வேறுபா டுணர்த்துகின்றது. (இ-ள்.) முதலொருபோகுவந்து, அதன்பின் னொருவெண்பாவந்து, அதன் பின்னொரு கலித்துறை வந்தால் அவை முத லுறுப்பாம். அதன்பின் ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம், வெண்டுறை, வெண்பா, மருட்பா, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்த மென்றுசொல்லப்படும் பாக்க ளியைக்தடி தொண்டியற்றுக. பிறபாக்கள் வரினு மிழுக்காது. (சக)

ஈசர்க்கு நூறிழிபைந் தையர்க் கிகலரசர்க்
காசற்ற தொண்ணூ றமச்சருக்காம்-வசா
எழுபானைம் பான்வணிகர்க் கேனையோர்க் காறைந்
திழிபிற் கலம்பகப்பாட் டுண்டு.

(எ-ன்.) கலம்பகத்திற் கேற்ற சுருக்கமியம்புகின்றது. (இ-ள்.) தேவர்க்கு நூறும், முனிவர்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், அமச்சருக் கெழுபதும், வணிகர்க்கைம்பதும், ஏனையோர்க்கு முப்பதுமாகப் பாவே தேயிழிபு. (எ-று.) ஆசற்றவென்று சிறப்பித்த வதனால், குறுநிலமன்னரை அரசரைப் போலவும், முனிவரைப் புத்தேளிரைப் போலவும் பாடினுமிழுக்காது. கலம்பகமும் அந்தாதியாகவே பாடவேண்டு மென்றறிக. (கஉ)

ஒலியந்தாதி. மும்மணிக்கோவை.

ஈண்டிய முப்பதா யிரொண் கலைவண்ணம்
மூண்டதொலி யந்தாதி முப்பதாம்-ஆண்டகவல்

முன்முறையே வெண்பா கலித்துறைய வந்தாதி
மும்மணிக்கோ வைக்கு முதல்.

(எ-ன்.) ஒலியந்தாதியும், மும்மணிக் கோவையு முணர்த்துகின்றது. (இ-ள்.) ஓரடிக்குப் பதினாறு கலைதொடுத்த பல சந்தவகுப்புக்கள் அந்தாதியாக முப்பது கூடியது ஒலியந்தாதியாம். நேரிசை ஆசிரியப்பாவும், நேரிசைவெண்பாவும், கட்டளைக் கலித்துறையும், முறையே அந்தாதியாக முப்பது கூடியது மும்மணிக்கோவையாம். (எ-று.) ஈண்டியவென்றமிகுத்துச் சொல்லிய வதனால், ஒலியந்தாதி சிறுபான்மை எட்டுக்கலையால் வரப்பெறு வனவும், மும்மணிக்கோவை சிறுபான்மை நிலைமண்டில ஆசிரியப்பாப் பெற்றுவருவனவும் உளவெனக் கொள்க. ஒலியந்தாதியை, ஒலியலந்தாதியென்பாருமுளர். (கங)

ஊர் நேரிசைவெண்பா. ஊரின்னிசைவெண்பா.

முதல்வனூ ரின்பேரான் மொழிவன வெண்பா
அதனைத்தொண் ணூறெழுபா னைம்பான்-மதர்விழியாய்
இன்னிசைவெண் பாவிற்த மொக்கு மியற்பெயர்
அன்னவற்றூர் கட்டுரைத்தா ராய்ந்து.

(எ-ன்.) ஊர்நேரிசை வெண்பாவும், ஊரின்னிசை வெண்பாவும், அவற்றின் றொகையு முணர்த்துகின்றது. (இ-ள்.) பாட்டுடைத்தலைவன் ஊர்ப்பெயரொடுத்து நேரிசைவெண்பாவாற் சிறப்பித்துத் தொண்ணூறு, எழுபது, ஐம்பது, என்னுந்தொகையாற் பாடுவது ஊர்நேரிசை வெண்பா வென்றும் இவ்வாறு இன்னிசை வெண்பாவாற் பாடுவது, ஊரின்னிசைவெண்பாவென்றும் பெயர்பெறும். (எ-று.) (கச)

கோவை, கைக்கிளை.

ஆய்ந்த கலித்துறைதா னானூ றகப்பொருண்மேல்
வாய்ந்தநற் கோவையா மற்றுனைப்பின்-ஏய்ந்த

ஒருதலைக் காம முறைப்பவையை யைந்தாய்
வருவிருத்தங் கைக்கிளையா மன்.

(எ-ன்.) கோவையுங் கைக்கிளையுங் கூறுகின்றது. (இ-ள்) கட்டளைக்கலித்துறை நானூறு அகப்பொருண்மேல் வருவன கோவையென்பதாம். ஒருதலைக் காமப்பொருள் பெற்று விருத்தம் இருபத்தைந்தாய் வருவன கைக்கிளையாம். (எ-று)

மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா
முன்னியமுப் பான்மும் மணிமாலை-மன்விருத்தம்
நாட்டிய நாற்பது நான்மணி மாலையாம்
ஈட்டிய வந்தாதியா யெய்ந்து.

(எ-ன்.) மும்மணி மாலையும், நான்மணி மாலையுங் கூறுகின்றது. (இ-ள்.) வெண்பாவும், கலித்துறையும், ஆசிரியமும் அந்தாதியாய் முப்பதுசெய்யுள் வருமாயின் மும்மணிமாலை யென்றும்; மேற்கூறிய பாக்களுடன், ஆசிரியவிருத்தஞ் சேர்ந்து அந்தாதியாய், நாற்பது செய்யுள் வருமாயின், நான்மணிமாலையென்றும் பெயர் பெறும். எ-று. (௩௬)

இருபாவிருபஃது. இரட்டைமணிமாலை,
இணைமணிமாலை.

ஏய்ந்த விருபா விருபதுவெண் பாவகவல்
ஆய்ந்த விரட்டை மணியிருபான்-ஏய்ந்தசீர்
வெண்பா கலித்துறையா மேவிய நான்கானூ
றென்பா விணைமணியா மோர்.

(எ-ன்.) இருபாவிருபஃதும், இரட்டைமணிமாலையும், இணைமணிமாலையு மியம்புகின்றது. (இ-ள்.) வெண்பாவும் ஆசிரியப்பாவும், முறையே அந்தாதியாய் வந்து இருபதுசெய்யுளான் முடிவது இருபாவிருபஃதென்றும், வெண்பாவும், கலித்துறையும், முறையே அந்தாதியாய் வந்து இருபது செய்யுளான் முடிவது வெண்பாக்கலித்துறையிரட்டை ம

ணிமாலையென்றும், வெண்பாவும் ஆசிரியப்பாவும் முறையே அந்தாதியாய் நூறுசெய்யுளால் முடிவது வெண்பாவகவலிணைமணிமாலையென்றும், வெண்பாவும் கலித்துறையும் கூடி முன்போன் முடிவது வெண்பாக்கலித்துறையிணைமணிமாலையென்றும் பெயர்பெறும். (எ-று.) (௪எ)

ஒருபா வொருபஃது. பன்மணிமாலை.

ஓர்ந்தகவல் வெண்பா கலித்துறையென் றொன்றினால்
ஆர்ந்தவொரு பாவொருப தம்மானை-கூர்ந்தொருபோ
கூச லொழித்தாற் கலம்பகப்பா வொண்மாலை
பேசிய பன்மணியாம் பின்பு.

(எ-ன்.) ஒருபா வொருபஃதும், பன்மணிமாலையு முணர்த்துகின்றது. (இ-ள்) ஆசிரியப்பாவேனும், வெண்பாவேனும், கலித்துறையேனும், அந்தாதியாய்ப் பத்துச்செய்யுள்வருவன வொருபா வொருபஃதாம். கலம்பக வுறுப்புகளில், அம்மானையும், ஒருபோகும், ஊசலும் ஒழித்து மற்றையவுறுப்புளாற் பாடுவது பன்மணிமாலையென்று பெயர்பெறும். எ-று. (௪அ)

தசாங்கம்

புல்லு மலையாறு நாடூர் புனைதார்மா
கொல்லுங் களிறு கொடிமுரசம்-வல்லகோல்
என்றிவை நஞ்செழுத்தோ டேலா வகையுரைப்ப
நின்ற தசாங்கமென நேர்.

(எ-ன்.) சின்னப்பூ வுணர்த்துவான் றொடங்கி, அதற்குநிலமாகிய தசாங்க முணர்த்துகின்றது. (இ-ள்.) மலை, ஆறு நாடு, ஊர், மாலை, பரி, கரி, கொடி, முரசம், செங்கோல், ஆகியபத்தும், தசாங்கமென்று சொல்லப்படும். இவைபாடுமிடத்து நஞ்செழுத்துத் தசாங்கத்துக்கு முன்னும் பின்னும் வாராமற் பாடுக. எ-று. (௪௯)

சின்னப்பூ. தசாங்கப்பத்து.

நேருந் தசாங்கத்தை நேரிசை வெண்பாவால்
ஈரைம் பதுதொண்ணூ றீண்டெழுபான்-ஓரைம்பான்
தேர்ந்துரைக்கிற் சின்னப்பூ வீரைந்தாற் செப்பினேர்
நேர்ந்தத சாங்க நிலை.

(எ-ன்.) சின்னப்பூவும், தசாங்கநிலையு முணர்த்துகின்றது. (இ-ள்.) தசாங்கம் பத்தையும் பொருளாகக் கொண்டு, நேரிசைவெண்பா நூறுனும் தொண்ணூறுனும், எழுபதானும், ஐம்பதானும் பாடுவது சின்னப்பூவாம். முப்பதுபாடினுமிழுக்காது. நிலைமைகள்தம்மி லொப்பக்கொண்டு பாடப்படுந் தசாங்கம் பத்தினையும், பத்துவெண்பாவாற் பாடுவது தசாங்கப் பத்தென்று பெயர்பெறும்-எ-று. (௨௦)

நிலையார் குடைசெங்கோ லூர்நாடு நீள்வேல்
கொலையார் களிறு குதிரை-சிலைவாள்
இவற்றின்மேன் மன்விருத்த மீரைந்தாய் வந்தால்
அவற்றின்பேர் நாட்ட லறிவு.

(எ-ன்.) விருத்தவிகற்ப முணர்த்துகின்றது. (இ-ள்.) குடை, செங்கோல், ஊர், நாடு, வேல், கரி, பரி, வில், வாள், இவ்வொன்பதினையும் பொருளாகக் கொண்டு, ஒன்றின்மேற் பத்தாசிரிய விருத்தம் புணர்த்தால், அப்பொருளோடு பெயர்கொடுத்து, குடைவிருத்தம், செங்கோல்விருத்தம், ஊர்விருத்தம், நாட்டுவிருத்தம், வேல்விருத்தம், யானைவிருத்தம், குதிரைவிருத்தம், வில்விருத்தம், வாள்விருத்தம் என்று வழக்கப்படும். எ-று. (௨௫)

ஊர்வெண்பா. அலங்காரபஞ்சகம்.

அரிந்திடி லூர் வெண்பா வைவிரண்டாம் வெள்ளை
செறிந்த கலித்துறை சீர்மன்பா-அறைந்த
கலங்காத மன்விருத்தங் காண்டகைய வண்ணம்
அலங்கார பஞ்சகமென் றூர்.

